"ஈட்டு மகத்திணையு மேய்ந்த புறத்திணையுங்
காட்டு களவியலுங் கற்பியலு—மீட்டும்
பொருளியன்மெய்ப் பாடுவமம் போற்றிய செய்யுண்
மரபியலு மாம்பொருளின் வைப்பு"

"பூமலர்மென் கூந்தால் பொருளியலிற் சூத்திரங்க
ளாவவறு நூற்றறுபத் தைந்தாகு—மூவகையா
லாயிரத்தின் மேலு மறுநூற் றொருபதென்ப
பாயிரத்தொல் காப்பியங்கற் பார்."

[இவ்வெண்பாக்களால் பொருளதிகாரச் சூத்திரங்கள் 665 என்பதும், தொல்காப்பிய முழுதுக்குமுள்ள சூத்திரங்கள் 1610 என்பதும் விளங்கும். முன் அச்சுப்பிரதியில், பொருளதிகாரச் சூத்திரங்கள் 666 ஆகக் காணப்படுவது, 462 ஆவது சூத்திரத்தை 463 என இலக்கமிட்ட அச்சுப்பிழையாலே யொழிய வேறல்ல.]

அறிக்கை : உதாரணச் செய்யுள்களுக்கு முதற் குறிப்பகராதி, பிழைதிருத்தங்கள், ஆராய்ச்சிக் குறிப்புக்கள் முதலியன தனிப்புத்தகமாக வெளியிடப்படும்.

# குறிப்பு

170-ஆவது பக்கம் 20-ஆவது வரிமுதல் 171-ஆவது பக்கம் 4-ஆவது வரிவரையில் உள்ள உரைப் பகுதியில், குற்றுகரம்' 'குற்றியலுகரம்' எனவருவனவற்றை முறையே 'குற்றிகரம்' 'குற்றியலிகரம்' எனத் திருத்திக்கொள்க.

இப்பிழை மயக்கத்துக் கிடந்தரக் கூடியதாதலால் ஈண்டுத் தனியே எடுத்துக் காட்டப்பட்டது.

# குறுந்தொகை

[In the Press—அச்சில்.]

இஃது எட்டுத்தொகை யென்று கற்றோரால் மிகப் பாராட்டப் படும் சங்கமரீஇய நூல்களுக்குள்ளே மிகச் சிறந்ததொன்று. இவ் வுண்மை,

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறு நூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகமபுறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை.

என்னும் பழம்பாட்டில் 'நல்ல' வென்னும் அடைமொழி கொடுத்துக் கூறப்பட்டதனால் நன்கு புலப்படும். இது 402 அகவற் பாக்களை யுடையது. இதனுள் கடவுள் வாழ்த்துப் பாரதம் பாடிய பெருந் தேவனாராலும் மற்றவை திப்புத்தோளார் முதலாக அம்மூவனா இறுதியாகவுள்ள புலவர் இருநூற்று நால்வராலும் பாடப்பட்டன [illegible] சிறந்த நூல் மிக அரிதின் முயன்று பெற்ற பல பிரதிகளை [illegible] பிழையறப் பரிசோதிக்கப்பெற்று, பலவகை ஆராய்ச்சி [illegible] உயர்ந்த கடிதத்தில் நல்ல எழுத்துக்களில் பதிக்கப் பெறு[illegible]

# [illegible]று

[In the [illegible]

எட்டுத்தொகையுள் ஒன்றாகிய இந்நூல [illegible] துப் பிழையறப் பரிசோதித்து உயர்ந்த கடிதத்தில் மு[illegible] எழுத்துக்களிற் பதிக்கப்படுகிறது.

# புறத்திரட்டு

[In the Press—அச்சில்.]

ஆதி காவியங்களினின்றும் சங்கச்செய்யுட்களினின்றும் திரட் டிய பல பாக்கள் அடங்கிய புறத்திரட்டென்னும் ஒரு நூல் உள்ளது. இதில், அச்சில் வாராத வளையாபதி முதலிய பல பழந்தமிழ் நூல் களினின்றும் எடுக்கப்பட்ட செய்யுட்கள் பல காணப்படுகின்றன. இதுகாறும் அச்சில் வாராத இவ்வரிய நூல் பலபிரதிகளைப் பார்த்து அச்சிடப்படுகிறது.

# தொல்காப்பியம் சொல்லதிகாரம்

## சேனாவரையருரையுடன்

[In the Press—அச்சில்.]

பண்டைத் தண்டமிழ் நூல்களின் ஆராய்ச்சிக்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகும் தொல்காப்பியம் என்னுந் தொல்லிலக்கண நூல் எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களாகப் பகுக்கப்பட்டுளது.

இவற்றுள் சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையர், நச்சினார்க்கினியர், இளம்பூரணர், கல்லாடர் எனப் பலர் உரை எழுதியிருக்கின்றனர். அவர்கள் உரையுளெல்லாம் சேனாவரையர் உரையே மிகச் சிறைப்புடைத்தாகி நிலவுகின்றது. சிவஞானயோகிகளும் அவர் உரையையே பெரிதும் பாராட்டுகின்றனர். ஆதலின் சேனாவரையர் உரையினையே இப்பதிப்பிற் கொண்டுள்ளது. ஆயினும் சேனாவரையருரையோடு மற்ற உரையாசிரியர்கள் மாறுப[illegible] அன்னார் உரையினை ஸ்மால்பைக்கா எழுத்தில் அச்சிட்டு[illegible] பிருக்கிறது. ஆசிரியர் சிவஞானயோகிகள் மறுப்புரை[illegible] னமே காட்டப்பட்டுள்ளன. இவைகளோடு இவ்வு[illegible] அனைவர் உரையினையும் ஆராய்ந்து, தெள்ளிய [illegible] குறிப்புக்கள் பல எழுதிச் சேர்க்கப்பட்டிருக்கின் [illegible] மையுடையார்க்கும் தமிழ்ப் பு[illegible]கும் இந்நூல் இன்றியமையாது [illegible]

இது ந[illegible] கண்ணைக் கவரும் இங்கிலீஷ் [illegible] எழுத்[illegible] உரை பைக்கா எழுத்திலும், பிற [illegible]ய[illegible], ஆராய்ச்சிக் குறிப்புக்கள் முதலியன எழு[illegible]லும் சுத்தப்பதிப்பாக அச்சிடப்படுகிறது.

---

## கலித்தொகை

[In the Press—அச்சில்.]

எட்டுத்தொகையுள் ஒன்றாகிய இந்நூல் அகத்திணை இலக்கணத்திற்கு இலக்கியமாய், படிக்குந்தோறும் படிக்குந்தோறும் பேரின்பம் பயக்கத்தக்க சொன்னயமும் பொருணயமும் ஒருங்குகொண்டது. இதுபற்றியே இதனைக் 'கற்றறிந்தோர் ஏத்துங் கலி' என்றார் ஆன்றோர். இந்நூல் நச்சினார்க்கினியராற்றிய உரையுடன் பிழையறப் பரிசோதித்து அச்சிடப்படுகிறது.